

# சதுரங்கம்

அனுசுயா அண்ணாந்து பார்த்தாள். நீல நிற வானத்தில் அந்த ஒற்றைப் பட்சி தன்னிச்சையாகப் பறந்து கொண்டிருந்தது. எத்தனை நேரம் இப்படிப் பறந்து கொண்டிருக்கும்?

அந்தப் பட்சிக்கு உலகப் பிரக்ஞையே இல்லை. கீழே விரிந்து நிற்கும் பூமியைப் பற்றி அதற்கு நிச்சயம் கவலையில்லை. வேஷம் போட வேண்டிய நிர்ப்பந்தம் அதற்கு இல்லை.

ஓ, நாம் ஏன் அந்தப் பட்சியாக இல்லை? நம்மை மாதிரி ஒரு வேஷம் போட வேண்டிய கட்டாயம் அதற்கு இருந்திருந்தால் அதனால் நிச்சயம் உயரப் பறந்திருக்க முடியாது, அத்தனை பாரத்தைத் தூக்கிக் கொண்டு... ஊஹூம் நிச்சயம் முடியாது....

''அனுசுயா பாடும்போது அவ குரல் ரேஞ்சுக்கு லிமிட்டே கிடையாது. என்னமா பறக்கறது பட்சி மாதிரி!''

கொஞ்ச நேரத்துக்குத்தான் அந்த பறப்பு. பிறகு குரலும் பார்வையும் மனசும் யதார்த்தத்துக்கு இறங்கும்போது தன்னுடைய எல்லை புரியும். புரிந்ததும் ஏன் இந்த வட்டத்துக்குள் அகப்பட்டுக் கொண்டோம் என்கிற திகைப்பேற்படும்.

இந்த வட்டத்துக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்காவிட்டால் எப்படியிருந்திருப்போம்?

இன்னொரு வட்டத்துக்குள் அகப்பட்டுக் கொண்டிருப்போம். வேறு விதமான கவலைகள்... நிர்ப்பந்தங்கள்... படாரென்று இவை எல்லாவற்றையும் அறுத்துக் கொண்டு போக முடிந்தால் தன்னிச்சையாக, சமூகத்தைப் பற்றின நினைப்பே இல்லாமல் எல்லா வேஷங்களையும் மறந்து களைந்து நிர்வாணமாக சங்கராபரணத்தை விரித்துக் கொண்டு மேலே மேலே சஞ்சரிக்க முடியுமானால்!

அப்பொழுது என்னை யாரும் கவனித்திருக்க மாட்டார்கள். 'அனுசுயா' என்கிற பெயர் உலகில் எங்கும் பிரபலமாகியிருக்காது, எந்தப் பத்திரிகை எடுத்தாலும் புகைப்படம் வந்திருக்காது. கையை கட்டி மனசை ஒடித்து கூட்டில் அடைத்திருப்பதால் தான் எல்லார் கவனத்தையும் இழுத்திருக்கிறோம்!

யாருக்கு வேண்டும் இந்த கவனம்? இதனால் யாருக்கு லாபம்? மூர்த்திக்கு.

இந்த நுணுக்கங்கள் எல்லாம் முதலில் புரியவில்லை அவளுக்கு. இருபத்தோரு வயதில் வார்த்தைகளின் ஜாலங்கள், அவை பின்னிய வர்ணத் தோரணங்களில், அவை தந்த போதையில் எதிர்காலம் ரொம்பப் பிரகாசமாக இருந்தது. சுதந்திரம் கிடைத்து விட்டது என்று மனசு துள்ளிற்று.

சுதந்திரம்.

எத்தனை பெரிய கேலிக்கூத்து!

வாசலில் கார் நிற்கும் ஓசை கேட்டு அவள் திடுக்கிட்டு நிமிர்ந்தாள். கதவை அறைந்து சாத்திக் கொண்டு இறங்கும் மூர்த்தியைப் பார்த்ததும் அ்வள் பழகிப் போன பதைப்புடன் எழுந்தாள்.

மூர்த்தி தன்னைச் சுற்றி ஒரு பொதுவான தூரப் பார்வை பார்த்தார். அவர் பார்வைக்குள் அவள் பட்டதும் நெற்றியில் சட்டென்று சுருக்கங்கள் தோன்றின.

''என்ன இங்கே உட்கார்ந்திருக்கே? நாளைக்குப் ப்ரோக்ராம் இருக்கு. தெரியுமோல்லியோ?''

சரசரவென்று அவளுக்குள் ஒரு முக மூடி இறங்கியது. முகத்தில் ஒரு பிரஸன்னம் வந்தது.

''தெரியும். நீங்க வர்றதுக்காகக் காத்துட்டிருந்தேன். என்ன பாட்டு பாடலாம்னு சொல்லுங்கோ. ப்ராக்டிஸ் பண்றேன்.''

அவளுடைய பிரசன்னத்தால் பாதிக்கவே படாமல் ஒரு சிடுசிடுப்புடன் 'உம்' என்று உறுமியபடி அவர் உள்ளே சென்றார்.

கலையழகோடு அலங்கரிக்கப்பட்டிருந்த அந்த விஸ்தாரமான கூடத்தின் நடு மையத்தில் அவள் தம்பூராவை ஜாக்கிரதையாகக் கார்பெட்டில் வைத்து சுருதி கூட்ட ஆரம்பித்தாள்.

மூர்த்தி ஒரு பெரிய காகிதச் சுருளுடன் வந்து நின்றார்.

''இதோ பார்!''

காகிதச் சுருள் விரிந்து கீழ்நோக்கித் தொங்கிற்று. அதில் அவளுடைய படம். பெரிய புகைப்படம். நாளைக்கு நடக்கவிருக்கும் ப்ரோக்ராமுக்கான விளம்பரம் கொட்டை எழுத்துக்களில்.

''மெட்ராஸில் ஒரு தெரு பாக்கி இல்லை. ஒரு சுவர் பாக்கி யில்லே. எல்லாத்திலேயும் உன் முகம்தான். உனக்காக இத்தனை

அலைஞ்சுட்டு வரேன். நீயானா அந்தப் பிரக்ஞையே இல்லாம ஆகாசத்தைப் பார்த்துண்டு உட்கார்ந்திருக்கே!''

இதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருப்பதில் ஏதும் அர்த்தமில்லை என்கிற உணர்வுடன் அவள் அவரைப் பார்த்து புன்னகைத்தாள்.

''சொன்னேனே. உங்களுக்காகத்தான் காத்துட்டிருக்கேனு. என்ன ராகம் பாடட்டும், தோடி பாடட்டுமா?''

''நீயே முடிவு செய்யறதுன்னா என்னை எதுக்குக் கேக்கறே? தோடி வேண்டாம் பைரவி பாடு.''

சென்ற கச்சேரியிலும் பைரவிதான் என்கிற ஞாபகத்தை அவள் அமுக்கினாள்.

''சரி.''

''அதைத் தவிர ரெண்டு ராகம். ரொம்ப விஸ்தாரப்படுத்தாமெ நாலு துக்கடாக்கள், கரஹரப்ரியா பாடு. ரொம்ப நீட்டி முழக்காமே.''

கரஹரப்ரியாவை எப்படி விஸ்தாரமாகப் பாடாமல் இருப்பது என்று அவள் திகைத்தாள். ராகத்தை ஆரம்பித்தவுடனேயே குரலும் மனசும் ஜிவ்வென்று இறக்கைக் கட்டிக் கொண்டு பறப்பது இவருக்குத் தெரியுமா?

''சரி.''

அவர் போட்ட லிஸ்ட்படி அவள் பாட ஆரம்பித்தாள். கற்பனை இன்று விரியவில்லை.

சஞ்சரித்திராத இடங்களைத் தேடிப் போகவில்லை, கட்டிப் போட்டு என்னை நிர்ப்பந்திக்காதே என்று கெஞ்சிற்று.

''நிறுத்து.''

அவள் திடுக்கிட்டு நிறுத்தினாள்.

மூர்த்தியின் பார்வையில் கோபம் தெரிகிறது.

''இப்படித்தான் நீ நாளைக்கு பாடப் போறியா? அத்தனை செலவழிச்சு அத்தனை விளம்பரப்படுத்தினதுக்கு எனக்கு அவமானத்தைத் தேடித் தரப்போறியா?''

''நாளைக்கு சரியாப் பாடிடுவேன். கவலைப்படாதீங்கோ!''

''எப்படி? முதல் வரிசையிலே உக்காந்திருக்கிற பெரிய மனுஷங்களைப் பார்த்ததும் உற்சாகம் வந்துடுமா?''

அவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். இந்த மாதிரி வார்த்தைகளைக் கேட்டு கேட்டு மனசு மரத்துக் கூடப் போய்விட்டது. இப்படிப்பட்ட பேச்சு இவருக்கு ஏதோ ஒருவகையில் திருப்தியளிக்கிறது. ஏன்? உன்னை ஆள்கிறவன் நான் என்கிற ஆணவத்தில் ஏற்படும் திருப்தியா? நான் இல்லாவிட்டால் நீ இந்த நிலைக்கு உயர்ந்திருப்பாயா என்ற ஆணவமா?

அவள் சமயம் கிடைத்த போதெல்லாம் மேடைகளில், பேட்டிகளில் வலியுறுத்தும் வார்த்தைகள்-

''என் முன்னோற்றத்திற்கு என் கணவர்தான் காரணம். எனக்கு கிடைக்கும் புகழும் பெருமைகளும் அவருக்குச் சேர வேண்டியவை.''

இந்த வார்த்தைகள் அவருக்குக் கவசம் மாதிரி. யாரும் தைரியத்துடன் அவளை அணுக விடாமல் பார்த்துக் கொள்ளும் கவசம். நாளா வட்டத்தில் அந்த வார்த்தைகளை அவளே நம்புகிற அளவுக்குப் புத்தி அடிமைப்பட்டுப் போயிற்று. மெஸ்மரைஸ் ஆனாற் போல, வேஷம் நிஜமாகிப் போனாற் போல-

அவள் தம்பூராவை எடுத்து வைத்து விட்டு முகத்தைக் கழுவிக்கொண்டு வந்து கண்ணாடியின் முன் நின்றாள். எதிரில் தெரிந்த உருவத்தைப் பார்த்து அவளுக்கே திகைப்பாக இருந்தது. முகத்தில் இன்னும் பளபளப்பு இருந்தது. தந்தமாய் மின்னிற்று. மார்பும் தோளும் இடையும் செதுக்கி வைத்த மாதிரி-

''ஏழு கடல் தாண்டித் தேடினாலும் என் பெண் மாதிரி கிடைப்பாளா ஐயா? இந்த மாதிரி ஒரு குரலும் அழகும் சேர்ந்து நீ பார்த்திருக்கியா ஐயா?''

அம்மாவின் யதார்த்தமான லௌகீக பேச்சை நினைத்தால் இப்பவும் சிரிப்பு வருகிறது. கூடவே கண்களில் நீர் நிறைகிறது. மொத்தத்தில் நான் என்றுமே மனுஷியாகக் கருதப்படவில்லை. நான் வெறும் பண்டம். வியாபாரத்திற்கான பண்டம். அம்மா ஒரு வித வியாபாரத்துக்கு உபயோகிக்கப் பார்த்தாள். இப்பொழுது மூர்த்தி வேறு வித வியாபாரத்துக்கு உபயோகிக்கிறார்.

இருபது வருஷங்களுக்கு முன்னால் அவர் சொன்ன வார்த்தைகள் இன்னும் நினைவில் பசுமையாக நிற்கிறது.

''எத்தனை பெரிய பொக்கிஷம் தெரியுமா நீ? இத்தனை சௌந்தர்யமும் இத்தனை கலைஞானமும் இதுவரை யாருக்குமே இருந்ததில்லை அனுசுயா! நீ உலகப் புகழ் அடைய வேண்டியவள். இந்த மாதிரி ஒரு சாக்கடையில் நீ இருந்தியானால் உன்னுடைய திறமை எப்படி வெளிச்சத்துக்கு வரும்? நான் உன்னை பிரபல மாக்கறேன். உலகம் புகழும்படி செய்கிறேன், அது மாத்திரம் இல்லை அனுசுயா. நான் உன்னைக் கல்யாணம் செய்துக்கறேன்.''

அன்று அந்த வார்த்தைகளைக் கேட்டு சிலிர்த்துப் போனது இன்னும் பசுமையாக நினைவில் நிற்கிறது.

திடீரென்று அவளுள் ஒரு ஆத்திரம் வந்தது. நீட்டி முழக் கிண்டுதான் பாடுவேன். விஸ்தாரமாத்தான் பாடுவேன். நீ யார் என்னைச் சொல்ல? உனக்கு என்ன தெரியும் கரஹரப்ரியாவைப் பத்தி. நீ ஒரு ஞான சூன்யம்... நீ ஒரு...!

அவள் சட்டென்று திடுக்கிட்டாள். இப்பொழுதெல்லாம் வரவர தன்னுள் இப்படி ஒரு ஆத்திரம் கிளம்புவதைக் கண்டு பயமாக இருந்தது.

என்ன நேர்ந்து விட்டது நமக்கு? என்ன நன்றி கெட்டத்தனம் நமக்கு?

அவள் அவசரமாகத் தம்பூராவை எடுத்து வைத்துக் கொண் டாள். கரஹரப்ரியாவை விஸ்தாரமாக எனக்காகப் பாடிக்கிறேன்...

நிதானமாக சௌக்கத்தில் ஆரம்பித்து படிப்படியாக சஞ்சரித்து மேல் ஸட்ஜமத்துக்கும் பஞ்சமத்துக்கும் மிதந்து நட்சத்திரப் பூவாய் பிர்க்காக்களை உதிர்க்கையில் கண்ணிலிருந்து நீர் ஆறாய்ப் பெருகிற்று.

எத்தனை ஆனந்தம்! எத்தனை பரவசம்! என்னுள் பொங்கும் இந்தப் பரவசத்தை எத்தனை மூர்த்திகள் முனைந்தாலும் அமுக்க முடியாது...

ஏதோ ஒரு உள்ளுணர்வுடன் அவள் கண்ணைத் திறந்தாள்.

எதிரே ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார் கண்ணை மூடிய பரவச நிலையில்.

அவள் பாட்டைச் சட்டென்று நிறுத்தினாள். யார் இவர்? எத்தனை நேரமாக இப்படி உட்கார்ந்திருக்கிறார்? வாசற்கதவு திறந்தே இருந்ததோ?

பாட்டு நின்றதை உணர்ந்து அவள் தன்னைப் பார்ப்பதைக் கண்டு மரியாதையுடன் எழுந்து நின்றார்.

''நமஸ்காரம். நீங்க என்னை மன்னிக்கணும். உங்களைப் பாக்கத்தான் வந்தேன். கதவு திறந்திருந்தது. நானா உள்ளே நுழைஞ்சுட்டேன். இத்தனை அற்புதமான சங்கீதத்தை எதிரிலே உக்காந்து ரசிக்கணும் போல இருந்தது.''

அவர் சங்கீதத்தில் கிறங்கிப் போயிருந்தது பார்வையிலும் குரலிலும் தெரிந்தது. நடுத்தர வயதாகத் தோன்றிற்று. வாட்ட சாட்டமான ஒரு கம்பீரம் தெரிந்தது.

அவள் மென்மையாகப் புன்னகைத்தாள்.

''உட்காருங்கோ. என்ன காரியமா பார்க்கவந்தேள்?''

''டில்லியிலே ஒரு பெரிய கான்ஃபெரன்ஸ் நடக்கப் போறது. ஐக்கிய நாடுகள் கலந்துக்கற மகாநாடு. அந்த மகாநாடு முடியற சமயத்துலே உங்க கச்சேரியை வெச்சுக்கணும்னு ப்ரைம் மினிஸ்டரே விருப்பத்தை தெரிவிச்சாராம்.''

லேசான பிரமிப்பு அவளுள் எட்டிப் பார்த்தது. ஒரு சின்ன சந்தோஷம் மனசை வியாபித்தது.

''நீங்க டில்லியிலேர்ந்து வந்திருக்கேளா?''

''இல்லேம்மா. நான் இந்த ஊரிலே தான் இருக்கேன். சீஃப் செகரட்டரியா இந்த ஊருக்கு வந்து இரண்டு மாசம்தான் ஆறது. இன்னிக்குக் கார்த்தாலே டில்லிலேர்ந்து ஃபோன் வந்தது. உங்களை அந்த ப்ரோக்ராமுக்கு ஃபிக்ஸ் பண்ணணும்னு.''

''எப்போ அந்த கான்ஃபரென்ஸ்?''

''அடுத்த மாசம் பதினாலாம் தேதி.''

அவள் தயங்கிக் கொண்டு சிரித்தாள்.

''இந்த ப்ரோக்ராம் விஷயமெல்லாம் என் கணவர் தான் பார்த்துக்கறார். அவர்கிட்டே நீங்க பேசினேள்னா தீர்மானம் பண்ணிக்கலாம்.''

''சரி. நாளைக்கு அவரை எப்பப் பார்க்கலாம்.''

''காலை வேளையிலே எட்டு மணிக்குள்ளே பார்க்கலாம். ஆனா நாளைக்கு எனக்குக் கச்சேரி இருக்கு. நாளைக் கார்த்தாலே அவர் ரொம்ப பிஸியா இருப்பார்.''

''ஒண்ணு பண்றேன். கச்சேரியிலே நாளைக்கு அவரைப் பார்த்து பேசிடறேனே?''

''தாராளமா!''

மூர்த்தி படுத்துக்கொண்டுவிட்டார் என்று தோன்றிற்று. அவள் அறைக்குள் மெல்ல நுழைந்தாள். சுவரைப் பார்த்தபடி படுத்திருந்த அவருடைய தோள்கள் கண்ணில் பட்டன. சிவந்த திடகாத்திரமான தோள்கள். அவளுள் சட்டென்று ஒரு தாபம் பிரவாகமாகக் கிளம்பிற்று. அடக்க முடியாது போல் மூச்சுத் திணறிற்று. அவள் ஓசைப் படாமல் கட்டில் மேல் குனிந்து அவர் தோளின் மேல் தன் அதரங்களைப் பதித்தாள்.

மூர்த்தி சரேலென்று திரும்பினார்.

அவளையும் அவள் நின்ற நிலையையும் பார்த்து சுருசுருவென்று அவர் முகத்தில் கோபம் ஏறுவதைக் கண்டு ஒரு பயம் ணணஎழுந்தது.

''பேசாம உன் ரூமுக்குப் போயிடு. மறுபடி இந்த மாதிரி வந்து நிக்காதே.''

அவமானத்தில் உடம்பு குன்றிப் போயிற்று. ஆனால் கண்களிலிருந்து கரகரவென்று நீர் வழிந்தது.

எவ்வளவோ முறை கேட்டுத் தோற்றுப்போன கேள்வி மறுபடி துரத்திக் கொண்டு வந்தது.

''ஏன்? என்னை எதுக்குக் கல்யாணம் பண்ணிண்டேள்? எதுக்கு?''

அவர் முகத்தில் கோபத்துடன் ஒரு அலுப்பும் தெரிந்தது.

''எதுக்காயிருந்தாலும் இதுக்கில்லே நிச்சயமா!''

அவளால் கண்ணீரை அடக்க முடியவில்லை. சுயபச்சாதாபமும் துக்கமும் கரை புரண்டு எழுந்தது.

''நான் என்ன தப்பு பண்ணினேன்? எதுக்கு இந்த தண்டனை! நானும் ஒரு மனுஷி. எனக்கு உணர்ச்சிகள் உண்டு. இந்தப் புகழும் பணமும் எனக்கு வேண்டாம். எனக்கு நீங்கதான் வேணும். நம்புங்கோ.''

மூர்த்தி கட்டிலை விட்டிறங்கினார். பலவந்தமாக அவளுடைய தோளின் மேல் இரு கைகளையும் பாரமாக அமுக்கி அவளுடைய அறைக்குத் தள்ளிக் கொண்டு போனார். அவளைக் கட்டில் மேல் அமர்த்தி,

''பேசாம தூங்கு. நாளைக்கு ப்ரோக்ராம் இருக்கு.'' என்று கூறிவிட்டு கதவைச் சாத்திக் கொண்டு போனார்.

அவள் தாங்க முடியாதவளாய் தலையணையில் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு விசித்து விசித்து அழுதாள்.

''நாளைக்கு ப்ரோக்ராம், நாளைக்கு ப்ரோக்ராம்.''

இதைத் தவிர வேறு எந்த உணர்வும் அவளைப் பார்த்ததும் அவருக்கு ஏன் ஏற்படுவதில்லை? மற்ற ஆண்கள் எல்லாம் அவளுடைய அழகைக் கண்டு நிதானமிழக்கும் போது இவருக்கு மட்டும் எப்படி இப்படி பாராமுகமாக இருக்க முடிகிறது?

மறுநாளைக்கு கச்சேரியில் சீஃப் செகரட்டரி சீனிவாசன் முன் வரிசையில் உட்கார்ந்திருந்தார். அவள் பாட ஆரம்பித்ததுமே அவர் முகம் பரவசப்பட்டுப் போனதை அவள் கண்டாள். மனசில் இதுவரை உணர்ந்தறியாத உற்சாகம் கரைபுரண்டு போயிற்று. கரஹரப்ரியா விஸ்தாரமாகப் பாடாதே என்று மூர்த்தி சொல்லியிருந்தது அறவே மறந்து போயிற்று.

கரஹரப்ரியா தெரியாத பிரதேசங்களை சாம்ராஜ்யங்களைத் தேடப் போயிற்று ஆர்வமாக.

கச்சேரி முடிந்து ஆட்கள் கலைந்தனர்.

''எந்தத் திமிர் இருந்தா இப்படி செய்வே நீ? நா சொன்னதை மீறி செய்யத் துணிஞ்சுட்டியா?''

அவள் மெல்லிய குரலில் சொன்னாள்:

''நா வேணும்னு செய்யலே. நம்புங்கோ.''

''புகழ் கிடைச்சுடுச்சுங்கற திமிர் உனக்கு. உனக்கு விழற மாலையெல்லாம் உன்னோட முயற்சியாலேன்னு நினைச்சுட்டியா? நா ஒருத்தன் இல்லேன்னா நீ எந்த நிலைமையிலே இருந்திருப்பேன்னு தெரியுமா?''

அவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

அவள் ஒரு ஆயாஸத்துடன் மடித்த புடவையை அலமாரிக்குள் வைத்தாள், கச்சேரிக்கு அணிந்து கொண்டு போன நகைகளை அவிழ்த்து வைத்தாள்.

''இனிமே நா சொல்றபடி நடந்துக்கல்லேன்னா தெரியும் சேதி? எவனாவது பைத்தியக்காரன் உன்னைப் புகழ்ந்துட்டான்னா உனக்குத் தலைகால் புரியறதில்லை. எவனோடு எத்தனை நேரம் பேசலாம்னு விவஸ்தை வேணும். ஒரு நயாபைசாவுக்கு உபயோகமில்லாத ஆட்கள் யார்னு எடை போடத் தெரியணும். உன் பாட்டைப் புகழ்ந்த வனுக்கு எல்லாம் நமஸ்காரம் பண்ணியானால் தெருவிலே நிக்க வேண்டியதுதான்.''

அவள் எதுவும் பேசாமல் படுக்கையறையை ஒட்டினாற் போலிருந்த பால்கனியில் போய் நின்றாள்.

அவருடைய பேச்சைக் கேட்க அருவருப்பாக இருந்தது. கிட்டத்தட்ட அம்மாவின் பேச்சு மாதிரி இருந்தது. அம்மா உடலை வைத்து வியாபாரம் செய்தாள். இவர் குரலை வைத்து வியாபாரம் செய்கிறார். இதுவும் ஒருவகை வேசித்தனம் என்று தோன்றிற்று.

அந்த ஸ்ரீனிவாசன் அடிக்கடி வர ஆரம்பித்தார். சில சமயங்களில் மூர்த்தி இருப்பார். மூர்த்தி இல்லாத சமயங்களில் அவர் பேச்சிலும் பாவனைகளிலும் அதிக நெருக்கம் தெரிவதை அவள் கவனித்தும் கவனிக்காத மாதிரி இருந்தாள். அவருடைய நெருக்க மான பேச்சு தன்னுள் எந்தவிதக் கலவரத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதை உணர்கையில் திகைப்பு ஏற்பட்டது. வாஸ்தவத்தில் அவருடைய பேச்சு அவளுக்கு இதமாக இருந்தது. புண்ணுக்கு இதமாக மருந்து தடவுகிற மாதிரி. அவருடைய பாராட்டுக்களில் ஒரு ஆத்மார்த்த அபிமானமும் சங்கீதத்தில் ஆழ்ந்த ஞானமும் தெரிந்தது காரணமாக இருக்க வேண்டும். அந்தப் பாராட்டுக்களில் எந்த வியாபார நோக்கமும் இல்லாதது காரணமாயிருக்க வேண்டும். நாள் செல்லச் செல்ல அவர் வருகையைத் தான் எதிர்நோக்க ஆரம்பித் திருப்பது அவளுக்கு லேசான அதிர்வைத் தந்தது. மூர்த்தி இதை யெல்லாம் கவனித்திருப்பாரா? கவனித்தும் வாயை மூடிக்

கொண்டிருக்கிறாரா என்று அவளுள் ஒரு பயம் ஏற்பட்டது. அவரை ஆழம் பார்ப்பதற்காக அன்று காலை மெல்லச் சொன்னாள்.

''அந்த ஸ்ரீனிவாஸன் எதுக்கு இங்கே அடிக்கடி வரணும்? டில்லி ப்ரோகிராமும் டேட்டும் ஃபிக்ஸ் பண்ணினப்புறம் அவர் எதுக்கு வரணும்?''

''ஏன் அவர் வந்தா உன்னை என்ன பண்றார்? அவர் பெரிய மனுஷன். நிறைய கான்டாக்ட்ஸ் இருக்கு. அவருடைய சினேகிதம் நமக்கு நல்லதுதானே? உபயோக மத்தவனோடல்லாம் உனக்குப் பேசப் பிடிக்கும். டில்லியிலேயும், வெளிநாட்டிலேயும் தொடர்பு வெச்சிருக்கிற ஸ்ரீனிவாஸனோட பேச உனக்குக் கசக்கிறதா?''

அவள் தனக்குள் சிரித்துக்கொண்டாள்.

டில்லி பயணத்துக்கான ஏற்பாடுகளையும், விளம்பரங்களையும் வெகு மும்முரமாக மூர்த்தியும், ஸ்ரீநிவாஸனும் செய்து கொண்டிருந்தார்கள். அவளுக்கு நாள் முழுவதும் கச்சேரிக்குப் பயிற்சி செய்வதே வேலையாகப் போயிற்று. பயிற்சியின்போது திடீர் என்று சொல்லாமல் வந்தமரும் ஸ்ரீனிவாஸனின் அருகாமையும், பாராட்டுதலும் புதுவெள்ள உற்சாகத்தை ஏற்படுத்தியது.

டில்லி கிளம்புவதற்கு முதல்நாள் கிராமத்தில் இருந்த மூர்த்தியின் அம்மா இறந்துவிட்டாள் என்று தந்தி வந்தது.

அவள் உண்மையான வருத்தத்துடன்,

''உடனே கிளம்பலாம். டில்லி ப்ரோக்ராமை கான்ஸல் பண்ணிடலாம்.'' என்றாள்.

அவர் கோபத்துடன் அவளைப் பார்த்தார். ''இதுக்கும் உனக்கும் சம்பந்தமில்லே. உன்னை அழைச்சிட்டு நான் கிராமத்துக்குப் போனா என்னையே உள்ளே விடமாட்டா. நான் மாத்திரம் போறேன். நீ

டில்லிக்குப் புறப்படு. உனக்கு சம்பந்தமேயில்லாத விஷயத்துக்காக டில்லி ப்ரோக்ராமை கான்சல் செய்வது மடத்தனம்.''

அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்தது. உனக்கு எந்த அபரித மான அந்தஸ்தையும் கௌரவத்தையும் கொடுக்க நான் தயாராக இல்லை என்றது பார்வை. நீ என் மனைவியாக இருப்பது எனது சௌகர்யத்துக்காக என்றது பேச்சு.

இப்பொழுதெல்லாம் மனத்தில் சுரீரென்று உறைக்கும் சீற்றம் மறுபடி ஏற்பட்டது. அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு கேட்டாள்.

''என்னை தனியாகப் போகச் சொல்றீங்களே?''

''தனி என்ன தனி? ஸ்ரீனிவாஸன்தான் கூட வராரே? அவர் எல்லாம் கவனிச்சுப்பார். அவருக்குத் தெரியாத பெரிய மனுஷன் டில்லியிலே கிடையாது.''

ரயில் பெட்டியில் அவளையும் ஸ்ரீனிவாசனையும் தவிர யாருமில்லை. அவள் எதுவுமே பேசாமல் வேகமாக நகரும் மரங்களைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். பச்சைப் பசேலென்ற புல்வெளிகள் நகர்ந்தன. வெள்ளை நாரைகளும், புறாக்களும் பறந்தன. சட்டென்று ஒரு உல்லாசம் மனசில் புகுந்தது. நாட்ட குறிஞ்சியுடன் தொண்டைக்குள் சல்லாபித்தது.

''இதெல்லாம் ஒரு தெய்வச் செயல் இல்லே அனுசுயா?''

அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

ஸ்ரீனிவாஸனின் புன்னகையிலும் பார்வையிலும் கனிவும் நெருக்கமும் தெரிந்தது.

''எது?''

அவருடைய முகத்தில் அந்தக் கனிவும் புன்னகையும் மாறவில்லை.

''என்ன சமாதானம் சொல்லலாம்னு நீங்க முயற்சி பண்ண வேண்டாம். மூர்த்தி உங்களை ஆட்டி வைக்கறதைப் பத்தியும் நீங்க வாயே திறக்காம பணிஞ்சு போறதைப் பத்தியும் மத்தவா சொல்லிக் கேட்டபோது நான் நம்பல்லே. ஆனா நான் நேரில் பல தடவை பார்த்தப்புறம், எல்லார் எதிரிலேயும் உங்களைக் கொசுவை நசுக்கற மாதிரி வார்த்தையாலே நசுக்கறதைப் பார்த்ததும் ஆச்சரியம் மட்டும் இல்லே துக்கமும் ஏற்பட்டது. அதுவும் நீங்க வாயைத் திறக்காம இருக்கிறது அபத்தமாகப்பட்டது...''

''அவருக்கு நான் ரொம்ப நன்றிக் கடன் பட்டிருக்கேன் ஸ்ரீனிவாஸன்! எப்படியோ சகதியிலே வாழ்ந்துண்டிருந்தவளை கௌரவமான சமூகத்தில் என்னையும் கௌரவமா வாழ வெச்சிருக்கார். நான் அதற்கு நன்றியோட இருக்க வேண்டாமா?''

ஸ்ரீனிவாஸனின் முகம் உணர்ச்சி வேகத்தில் பளபளத்தது.

''சுத்த ஹம்பக்! அந்த வார்த்தைகளைச் சொல்லி உங்களை நீங்களே ஏமாத்திக்காதீங்கோ. இப்ப உங்களுக்கு இருக்கிற புகழ் எல்லாம் உங்களுக்கிருக்கிற சரஸ்வதி கடாட்சத்தினால். ஆதாய மில்லாம அவர் உங்களை வெச்சிண்டிப்பார்னு நினைக்கி றீங்களா?''

சட்டென்று அவள் உடைந்து போனாள். ஜன்னல் மேல் தலையைக் கவிழ்த்தபடி இனியும் தாங்க முடியாது என்கிற மாதிரி விசித்து விசித்து அழுதாள். ஓட்டையாகி விட்ட சட்டி மாதிரி அதிலிருந்து வெளியேறும் பிரவாகத்தைத் தடுக்க முடியாது மாதிரி பலஹீனமான அந்த தருணத்தில் கண்ணீர்ப் பிரவாகத்தைத் தடுக்க முடியாமல் போயிற்று.

வஜ்ரம் மாதிரி இரண்டு கரங்கள் அவளுடைய தோளில் அமர்ந்தன.

''அனுசுயா...!''

மிக மிருதுவாக வந்தன வார்த்தைகள், வருடுகிற மாதிரி. அவள் ஆகர்ஷிக்கப்பட்டு தன்னையறியாமல் திரும்பிப் பார்த்தாள்.

''நீங்க கண்ணீர் விடறது ரொம்ப அபத்தம் அனுசுயா. கர்நாடக சங்கீதத்தில் சக்ரவர்த்னி நீங்க. உங்க பாட்டுக்கு அடிமையா லட்சக் கணக்கா ஜனங்க இருக்கறப்ப நீங்க இன்னொருத்தருக்கு அடிமை யாட்டம் இருந்துண்டு அவர் சொல்கிறபடியெல்லாம் ஆடறது ரொம்பக் கேவலமான விஷயம்...''

அவளுள் மெல்ல ஒரு கலவரம் பரவிற்று. அவள் வெளியே தெரிந்த வயல் வெளியைப் பார்த்தபடி சொன்னாள்.

''என்னைக் குழப்பாதீங்க ஸ்ரீனிவாஸன். நான் இருக்கறபடி இருந்து விட்டுப் போறேன். எதிர்த்துக் கொண்டு போறது எனக்குப் பழக்கமில்லே. என் சுபாவமுமில்லே. எதிர்த்தால் இன்னும் பிரச்னைகள் வரும். அதையெல்லாம் சந்திக்க எனக்குத் தென்பில்லே. என் மனசை நான் எப்பவோ சமாதானப்படுத்திண்டாச்சு. பிறந்ததிலிருந்து நான் வெறும் பகடைக்காய். எனக்காக எந்த சுதந்திரமும் கிடையாது...''

அவர் சிரித்தார்.

''இது ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயம் அனுசுயா. இப்பல்லாம் பெண்கள் சுதந்திரம்னு ஏக கோஷமாயிருக்கு. எத்தனையோ சுதந்திரமா வாழற பெண்கள்கூட தாங்க இரண்டாம் பட்சப் பிரஜைகளாகக் கருதப்படறதா கோஷமிடறாங்க. உங்களுக்

கானா இஷ்டப்பட்ட புடவையைக் கட்டிக்க முடியாது. நினைச்ச அளவுக்கு ஒரு ராகத்தைப் பாட முடியாது. உங்களுக்கேன் இந்தத் தண்டனை?''

''நான் அதை தண்டனையா நினைக்கல்லே.''

''நான் அதை நம்பல்லே. உங்களுக்கு பயம். சமூகத்தைக் கண்டு பயம். 'அடச்சீ போய்யா'ன்னு அவரை உதறிட்டுக் கிளம்ப பயம்...''

''உங்களுடைய இளமை இன்னும் போகல்லே. பார்க்க இருபத்து அஞ்சு வயசுப் பொண்ணு மாதிரி இருக்கீங்க. இன்னும் முப்பது வருஷத்துக்கு மேடையேறி பாடக்கூடிய குரல் வளம் இருக்கு. ஒருத்தனுக்கு மனைவிங்கற ஸ்தானம் ஒண்ணுதான் கிடைக்க முடியாத பாக்கியம்னு பத்தாம் பசலித்தனமா நினைக்கிறேள்.''

அவளுக்குத் திகைப்பாக இருந்தது. இவர் பேச்சைக் கேட்கக் கேட்க வார்த்தைகள் அவளைக் குழப்பின. கூடவே போதையேற்றின. மூர்த்தி இந்த மாதிரி விஷயங்களைப் பேசினதில்லை. அவளையறி யாமல் அவரிடம் ஒரு ஆகர்ஷிப்பு ஏற்பட்டது. மரியாதை ஏற்பட்டது. அவருடைய ஹாஸ்யத்துக்கெல்லாம் வாய்விட்டுச் சிரிக்க முடிந்தது. அன்றிரவு அவர்கள் தனித்திருந்த ரயில் பெட்டியில் அவளருகில் நெருக்கமாக அமர்ந்து அவர் மெல்லிய குரலில் பாரதியின் கண்ணம்மா பாட்டு ஒன்று பாடிய போது அவள் கிறங்கிப் போனாள்.

''ஓ எத்தனை நன்றாகப் பாடுகிறீர்கள்!'' என்று ஆச்சரியத்துடன் கையைக் கொட்டி சிரித்தாள், சின்னப் பெண் மாதிரி.

அவர் மிக இயல்பாக அவளை அணைத்தபடி சொன்னார்,

''இதுதான் ஆனந்தம் அனுசுயா. இரண்டு மனசு சங்கமிக் கும்போது அங்கே பிறக்கிற உணர்வு இருக்கே அதுக்கு ஈடு எதுவுமே இல்லே.''

அவளுள் திடீரென்று ஒரு தாபம் எழுந்தது. அவர் கை பட்ட மாத்திரத்தில், உறங்கிக் கொண்டிருந்த வீணையின் ஸப்தஸ்வரங் களை எழுப்பினாற் போல நரம்புகள் சிலிர்த்து எழுந்தன.

அவர் மிக மெதுவாகப் பேசினார்.

''இந்த சரீரம் ஒரு சட்டை மாதிரி அனுசுயா. அதுக்கு அதீதமான முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. அப்படிக் கொடுத்ததாலதான் நீ வேண்டாத பிரமையிலே இருக்கே. கறைபட இருந்த வாழ்வைத் துணிஞ்சு ஒருத்தன் கரையேத்திட்டான்னு நன்றி விசுவாசம்னு உக்காந்தி ருக்கே. இந்த உடம்புக்கும் நமக்கும் சம்பந்தமேயில்லே அனுசுயா.''

அவள் உருகினாள். கரைந்தாள். ஓ இதுதான் ஆனந்தம். நான் நானாக இருக்கும் ஆனந்தம்... ஒவ்வொரு இரத்த நாளமும் மீட்டப் பட்ட நாதமாய் இழைந்தது. இந்த என் செய்கை மிக இயல்பானது என்றது...

டில்லியில் நாட்கள் வெகு துரிதமாக, ஆனந்தமாகக் கழிந்தன மனசில் பொங்கிய சுதந்திர உணர்வில், உடலுக்குக் கிடைத்த சமாதானத்தில் அற்புதமாகப் பாட முடிந்தது.

எங்கு திரும்பினாலும் பாராட்டுக்கள், புகழ் மாலைகள், வெளிநாட்டுக்கு அழைப்புகள், இதுவரை அனுபவித்திராத திருப்தி அவளுக்கு ஏற்பட்டது.

''நீ இப்ப எத்தனை அழகாயிருக்கே தெரியுமா அனு?'' என்று அணைத்தபடி சொல்வார் ஸ்ரீனிவாசன். ''இந்த ஆறு நாள்லே பத்து வயது குறைஞ்ச மாதிரி இருக்கே, மனசிலே இருக்கற பிரமைகள் குறைஞ்சதினால.''

என்ன காரணம் என்று அவளுக்குப் புரியவில்லை. ஆனால் மனது லேசாகிப் போயிருந்தது. உற்சாகமாகத் துள்ளிற்று.

சென்னையை நோக்கி பிரயாணம் செய்யும் போதுதான் சுரீரென்று விழிப்பு ஏற்பட்டாற் போல் யதார்த்தத்தின் பிரக்ஞை ஏற்பட்டது. மறுபடி மூர்த்தியின் ஆஞ்ஞைப்படி அவர் இழுத்த

இழுப்பின்படி வாழவேண்டிய யதார்த்தம். இந்த எட்டு நாட்களில் ஆகாயத்தில் மிதந்ததற்கெல்லாம் ஏதும் அர்த்தமில்லை என்று உணர்த்தின யதார்த்தம்.

மேற்கொண்டு என்ன செய்வது என்று ஒரு பிரமிப்பு ஆட்கொண்டது. ஸ்ரீனிவாசன் எந்தவித பாதிப்பையும் காண்பிக்காமல் சகஜமாக அளவளாவினார். ஜோக் அடித்தார். சல்லாபித்தார். உபநிஷத்தையும் வேதாந்தத்தையும் பேசியே அவள் மூளையை மழுங்கடித்து அவர் சல்லாபித்ததை நினைக்கையில் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவருக்கு மனைவியும் குழந்தையும் இருப்பது அவளுக்குத் தெரியும். அவளிடம் இந்த எட்டு நாட்களில் அவர் காட்டிய பிரியத்துக்கு எத்தனை ஆழம் இருக்கும்? அவளை சமூகத்தைக் கண்டு பயப்படாதே என்று சொல்லும் இவருக்கு தைரியம் இருக்காதா? மூர்த்தியை உதறிட்டு வா என்றால் அந்த இடத்தை இவர் நிரப்புவார் என்றுதானே அர்த்தம்?

அவள் சிரித்துக் கொண்டு கேட்டாள், ''மெட்ராஸுக்குப் போனப்புறம் என்ன பண்ணப் போறீங்க?''

அவர் புருவங்களை உயர்த்திப் பார்த்தார்.

''என்ன பண்ணுவேன்? எப்போதும் போலத்தான் வீடு, ஆபீஸ் வேலை இருக்கவே இருக்கு.''

''என்னை என்ன பண்ணப் போறீங்க.''

அவர் வியப்புடன் அவளைப் பார்த்தார், இதென்ன அசட்டுக் கேள்வி என்கிற மாதிரி. பிறகு செல்லமாக அவளுடைய கன்னத்தைக் கிள்ளிச் சிரித்தார்.

''அடிக்கடி உன்னைப் பார்க்க வருவேன், மூர்த்தி இல்லாத சமயத்திலே'' என்று கண்ணைச் சிமிட்டினார். ''ரகசியமா காதல் செய்யறதிலே இருக்கிற திரில் வேறெதிலேயும் இல்லே...''

சுரீரென்று ஒரு கீறல் மனசில் விழுந்தது. ரணமாய் வலித்தது. அவமானத்தில் கண்களில் நீர் துளிர்த்தது. சரசரவென்று அவருடைய முகமூடி அசிங்கமாய் கிழிந்த மாதிரி தோன்றிற்று. அவள் தன் சினத்தை அடக்கிக் கொண்டு சொன்னாள்.

''எட்டு நாளா எனக்கு உபதேசம் பண்ணீங்க. நா மூர்த்திகிட்ட அடிமைப்பட்ட வாழ்வு வாழக் கூடாது, சமூகத்தைக் கண்டு பயப் படக்கூடாது, வேண்டாத பிரமைகளை மனசிலே வளர்த்துக்கக் கூடாதுன்னேள். சமூகத்தை எதிர்த்துக் கொண்டு என்னை ஏத்துக்கற துணிவு உங்களுக்கு இருக்குமா?''

அவர் அதிர்ச்சி அடைந்த மாதிரி அவளைப் பார்த்தார்.

''இது என்ன பைத்தியக்காரத்தனமான பேச்சு அனு? மனசாலே சோர்ந்து போயிருக்கிற உனக்கு உற்சாகம் கொடுக்கணும்ங்கற எண்ணம்தான், எனக்கு. வேறு எந்த அர்த்தமும் இல்லே. நான் திருப்பித் திருப்பிச் சொன்னேனே! இந்த சரீரம் என்கிறது வெறும் ஒரு கருவி. எனக்கு உன் மேலே இருக்கிற அபிமானத்தை உணர்த்த உபயோகிக்கப்பட்ட கருவி அது. ஒரு பந்தத்தை ஏற்படுத்தணும்ங்கற அவசியமில்லே. இப்பவும் நீ சோர்ந்து போகிற சமயத்திலே உற்சாகப்படுத்தத் தயாராயிருப்பேன். மூர்த்தியுடைய ஆதிக்கம் அதிகமாகிப் போச்சுன்னா தனியா பிரிஞ்சு போயிடு. அப்ப உன் இஷ்டப்படி வாழலாம்.''

அவர் பேசப் பேச தன்னுள் ஏற்படும் அதிர்ச்சியையும் வெறுப் பையும் அவள் வெகு பிரயாசைப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

''அனு! உனக்கு அந்த வாழ்க்கை புதுசில்லே. நீ பிறந்ததே...''

''போதும் நிறுத்துங்கோ!''

அவள் பிறகு அவருடன் ஒரு வார்த்தை பேசவில்லை. கண்ணீர் சிந்தவில்லை.

ஓ, இந்த ஆண்கள்!

வெறுப்பும் கோபமும் மனசில் தீயாய் மூண்டது. எத்தனை கேவலமாக நடத்திவிட்டான். பெரிய மனிதன் என்கிற போர்வையில் எத்தனை நீசத்தனமாக என்னுடைய பலவீனத்தை உபயோகித்துக் கொண்டு விட்டான்! நான் ஒருத்தனின் மனைவி என்று இவன் மரியாதை கொடுக்கவில்லை. ஒரு வேசியின் மகள் என்பது ஒன்று தான் இவனுக்குத் தெரியும். இந்தப் பிரக்ஞைதான் என்னுடைய உணர்வுகளுடன் இவனை விளையாட வைத்தது. இதே பிரக்ஞை தான் மூர்த்தியை நம்மிடம் நெருங்க விடாமல் தடுக்கிறது.

திடீரென்று அவளுள் பெரிய ஆயாஸம் புகுந்து கொண்டது. தான் அகப்பட்டுக் கொண்டிருக்கும் சுழலிலிருந்து மீளுவது அசாத்தியமான காரியம் என்று தோன்றிற்று.

''சங்கீதத்திலே சக்ரவர்த்தினி நீங்க. யாருக்கும் அடிமையா ஏன் இருக்கணும்?''

அவளுக்குப் பெரிதாகச் சிரிக்க வேண்டும் போலிருந்தது.

மீண்டும் சென்னை...மீண்டும் மூர்த்தியின் விரட்டல்கள்... கோபங்கள், நிஷ்டூரங்கள். ஸ்ரீனிவாஸன் மறுபடி கிட்ட நெருங்காமல்... அவள் தீர்மானமாகச் சொன்னாள். ''என்னை தனியா சந்திக்க முயற்சி பண்ணாதீங்க ஸ்ரீனிவாஸன். வந்தீங்கன்னா உங்க வீட்டுக்குத் தெரிவிச்சுடுவேன். இல்லே பத்திரிக்கை பேட்டியிலே சொல்லி விடுவேன். மான அவமானப் பிரச்னை எனக்கு இல்லே. என் குலத்தைப் பத்தி உங்களுக்குத் தெரியுமே?''

பிறகு ஸ்ரீனிவாஸன் எட்டிப் பார்க்கவில்லை. நாட்கள் நழுவின, விரல்களிடையே ஆற்று மணலாய். ஒரு நாள் மூர்த்தி ரௌத்ரகாரமாய் வீட்டுக்கு வந்தார்.

''எப்படி நடந்துண்டே அந்த ஸ்ரீனிவாஸன் கிட்ட டில்லி போன போது சொல்லு!''

அவள் ஒரு விநாடி பயந்து போனாள்.

''நீங்க என்ன சொல்றேள்னு எனக்குப் புரியல்லே!''

''உனக்கு ஒண்ணும் புரியாது. சரியான அழுமூஞ்சி. அந்த ஸ்ரீனிவாஸன் கிட்ட நீ சரியா நடந்துண்டிருக்கமாட்டே. அவருக்கு உன் மேலே ஏதோ அதிருப்தி. அசமாதானம். ஒரு பெரிய யூரோப்பியன் டூர் காண்ட்ராக்ட் ஏற்பாடு பண்ணித் தர்றதா சொல்லியிருந்தார். இப்போ வேற யாருக்கோ சிபாரிசு பண்ணியிருக்கார். சரியான மூடம் நீ. சரியான தரித்திரம் நீ. எந்த மாதிரி டிரெயினிங் உங்கம்மா உனக்குக் கொடுத்திருக்கான்னே புரியல்லே...''

நாராசமாய் விழுந்தன வார்த்தைகள். அதன் தாத்பர்யத்தை ஜீரணிக்கையில் மனசு அதிர்ந்து குலுங்கியது. காண்ட்ராக்ட் நழுவிப் போன கோபத்தில் அவர் மேற்கொண்டு இன்னும் ஏதோ அசிங்கமாகக் கத்திவிட்டுப் போனார்.

அவள் வெகு நேரம்வரை பிரமை பிடித்தவளாய் உட்கார்ந்திருந்தாள். இந்த ஜன்மத்தில் எனக்கு விமோசனமில்லை என்று சொல்லிக் கொண்டாள்.

திடீரென்று கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. வயிற்றை என்னவோ செய்தது. அவள் தள்ளாடியபடி குளியலறைக்குச் சென்றாள். கடகடவென்று வாந்தி வந்தது. ஓ, என்ன நேர்ந்துவிட்டது நமக்கு என்று பலஹீனமாக நினைக்கையில் பிரக்ஞையில் ஒரு உணர்வு தாக்கியது.

திடீரென்று அவளுள் ஒரு சீற்றம் எழுந்தது. அடக்க முடியாமல் காட்டுத் தீயாய் வெடித்தது. ஒரு உத்வேகம் கிளம்பி விசுவரூப தரிசனம் ஆனாற் போல் நெஞ்சு விம்மியது.

தூ!

அவளை ஏமாற்றிய ஆண்வர்க்கம் ஒட்டு மொத்தமாய் எதிரே நிற்கிற மாதிரி அவள் காரி உமிழ்ந்தாள்.

தூ!

'நான் தோற்கவில்லை. இது என் வெற்றி' என்று சொல்லிக் கொண்டாள். நீங்கள் என்னை உபயோகித்தீர்கள். 'நான் உங்களை உபயோகித்துக் கொண்டு விட்டேன். என் வேண்டுகோள் பலிக்கப் போகிறது. என் ரத்தமாய், என் பிம்பமாய், என் பாஷை பேசக் கூடியதாய் ஒரு பிரகிருதியை உருவாக்கப் போகிறேன்.'

ஸ்ரீனிவாஸன்! நீங்கள் சொன்னது சத்தியமான வார்த்தை. இந்த சரீரத்துக்கும் எனக்கும் சம்பந்தமில்லை. என் சரீரத்துக்கு ஏற்பட்ட அவமானம் என்னைச் சேர்ந்ததில்லை...

அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். சொற்பமாக உடைகளையும் பணத்தையும் நகைகளையும் அவசரமாகக் கைப் பெட்டியில் திணித்துக்கொண்டாள். சில நிமிஷங்களில் ரயில் நிலையத்தை அடைந்து காத்திருந்த ஒரு ரயில் வண்டியில் ஏறி அமர்ந்தாள்.

எங்கேயாவது போய்விட வேண்டும். மூர்த்தி கேள்விப் பட்டிராத எந்த மூலைக்காவது. மூர்த்தி தேடிப் பிடிப்பதற்குள் அகப்படாமல் போய்விட வேண்டும்.

சாத்தியமா?

சாத்தியம். சாத்தியமாக்குவேன்.

என் வயிற்றில் இருக்கும் கருவைப் பற்றி நீ அறிந்தால் அதை நீ வளர விடமாட்டாய். இதுநாள்வரை என்னை நீ அவமானப் படுத்தியதை நான் தாங்கிக் கொண்டேன். என் சிசுவை நீ அவமானப் படுத்தினால் அதை நான் தாங்க மாட்டேன். அதனால்தான் போகி றேன் மூர்த்தி... கண் காணாத ஊருக்கு. நீ எட்டமுடியாத தொலை வுக்கு... தன்னிச்சையாய் பறக்கும் அந்தப் பட்சி மாதிரி...

ஜன்னலுக்கு வெளியே காட்சிகள் துரிதமாக நகர்ந்தன. இருள் சரசரவென்று விரிந்தது. அவள் தனக்குள் புன்னகைத்துக் கொண்டாள். வாழ்க்கை என்னும் சதுரங்கப் பலகையில் இரவுகள் மட்டும் இல்லை என்று சொல்லிக் கொண்டாள்.

**சாவி - 1981**

